[30th January 1961

(உ) அவர்கள் பயிற்சி முடிந்துவிட்டதா ?
(எ) அந்தப் பயிற்சியினால் ஏற்பட்ட பயன்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) None, Sir.
(*b*) to (*d*) Do not arise.

SRI A. VEDARATHNAM : யாழ்ப்பாணத்தில் இந்த புகையிலையை பாடம் செய்கின்ற முறையை நம்முடைய நாட்டிலும் கொண்டு வருவதற்கு முயற்சி எடுக்கப்படாததின் காரணமாகத் தான் அந்த நாட்டிலிருந்து யாழ்ப்பாணம் இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே அந்த முறையை இந்த நாட்டில் கொண்டு வந்தால் இறக்குமதியைக் குறைக்கலாமே ? அந்தத் துறையில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கீழ் பவானி பிரதேசத்தில் இந்த மாதிரியான யாழ்ப்பாண முறையைக் கையாளலாமா என்பதைப்பற்றி யோசிக்கப்பட்டது. பின்னால் அந்த முறை நமது நாட்டுக்குத் தகுதியாக இருக்காது என்ற முடிவு செய்யப்பட்டது. அதோடு வேறு எந்த முறையைக் கையாண்டால் இதை அபிவிருத்தி செய்யலாம் என்பதைப் பற்றியும் கவனிக்கப்பட்டு வருகிறது.

*Construction of houses*

*247 *Q.*—SRI M. A. B. ARUMUGHASAMY (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கூட்டுறவு வீடு கட்டும் சங்கங்கள் மூலமாக நமது ராஜ்யத்தில் ஜில்லா வாரியாக 1959-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 1-ந் தேதி முதல் 1960-ம் வருஷம் மார்ச் மாதம் முடிய கட்டிய வீடுகள் எத்தனை?

(இ) ஜில்லாவாரியாக, கடனாகக் கொடுக்கப்பட்ட பணம் எவ்வளவு ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (இ) A statement [a] is placed on the table of the House.

SRI M. A. B. ARUMUGHASAMY : ஸார், கிராமாந்திர கூட்டுறவு முறையில் வீடு கட்டும் திட்டத்திற்கு கொடுக்கப்பட்டு வரும் தொகையை இன்னும் உயர்த்திக் கொடுப்பதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசமிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது இருக்கின்ற முறை பிரகாரம் 50 சதமானம் ராஜ்ய சர்க்காரும், 50 சதமானம் கிராமவாசிகளும் கொடுக்க வேண்டியிருக்கிறது. இதில் கஷ்டம் இருப்பதாகத் தெரிவதால் 50 சதமானத்தில் 30 சதமானத்தை கூட்டுறவு சங்கங்களிலிருந்து கொடுக்க அதிகரிக்கலாம் என்ற விஷயம் சர்க்காரின் யோசனையில் இருக்கிறது.

---

[a] Printed as Appendix II on page 133 infra.